அருட்கவி தவத்திரு

# ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஐயப்பன் அருட்புகழ்





ஸ்வாமிகளின்
ஆறாவது
ஆராதனை நாள்
வெளியீடு
(4-3-2006)

வெளியிடுவோர்:

ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட்
நங்கைநல்லூர், சென்னை–61.

உ

அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஐயப்பன் அருட்புகழ்



ஸ்வாமிகளின் ஆறாவது ஆராதனை நாள் வெளியீடு

வெளியிடுவோர்:

**ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்**
**அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை**
**பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட், நங்கைநல்லூர், சென்னை-61.**
**4-3-2006**

## ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை

| | | |
|---|---|---|
| பெயர் | : | ஐயப்பன் அருட்புகழ் |
| ஆசிரியர் | : | அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு – 4-3-2006 |
| வெளியிடுவோர் | : | பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட் |
| வெளியீட்டுரிமை | : | பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட் |
| அளவு | : | A8 (Dimmy) |
| பக்கங்கள் | : | 32 |
| காகிதம் | : | 60 GSM Maplitho |
| அட்டை | : | 120 GSM Art Board |
| பொருள் | : | ஆன்மிகம் (கவிதைகள்) |
| விலை | : | Rs.12.00 |
| பிரதிகள் | : | 1100 |
| Laser Typeset & Printed | : | Visual Graphics, Chennai-61 ✆ 9841459068 |

கிடைக்குமிடங்கள் :

- **பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்**
  பொங்கி மடாலயம், 10/22, பொங்கி மடாலயம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–600 061. Ph.: 22241355
- **R. ஸ்ரீதரன்**
  'ஸ்வர்ணபுரி" எண்.T-7, முதல் குறுக்கு, 46–ஆம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–600 061. Ph.: 22321616
- **ஸ்ரீ மு.கோ. ராமன்**
  'ஸ்ரீ வைஷ்ணவி', பரப்பனங்காடி–676 303. Ph.: 0494 - 2411282
- **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
  எண்.154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை–600 018.


## பொருளடக்கம்

R.ஸ்ரீதரன், "ஸ்வர்ணபுரி",
T-7, முதல் குறுக்கு, 46-ஆவது தெரு, நங்கைநல்லூர்,
சென்னை-600061. ☎ (44) 2232 1616.



23:02:2006

## அணிந்துரை

இந்நாள் ஒரு நன்னாள்; புகழ்மணம் பரப்பும் திருநாள்; இறையருளின் புகழ் போற்றும் மலர் ஒன்று முகிழும் நாள். 'உயிரினங்கள் ஒன்றையொன்று வணங்கிடும்போது அதன் உள்ளிருந்து வாழ்த்தும்' அவன் அருளைப் போற்றும் அருட்புகழ்த் திரட்டொன்று திரளும் நாள். அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகளின், ஐயப்பன் அருள் பரவும் வகை செய்யும் அருட்புகழ்த் திரட்டொன்று அண்மையில் (04:03:2006) வெளிவர உள்ளமை கேட்டு இவ்வேழையேனின் உளம் கிளர்ந்தெழும் பேறு பெற்ற பெருநாள்.

நூற்றொன்பது பாடல்கள்; அண்ணல் அருணகிரி யாத்தருளிய அண்ணன் அறுமுகனின் திருப்புகழுக்கு இணையாக, அவற்றினும் எளிமையாக, சந்தங்களோடு துள்ளி வரும், தம்பி ஐயப்பனின் அருளைக் கூறும் அருமையான பாடல்கள். அந்த இனிய பாடல்களில் விளங்காத சொற்களுமுண்டோ? ஸ்வாமிகளின் செந்தமிழ்த் திறல் தூறலாக ஆங்காங்கே தெளிக்கப் பட்டுள்ளனவோ? "குறிப்புரைகள்" இடையிடையே குறுக்கிடுவது அதனால்தானோ? பாடல்கள் எளிமையாக இருப்பினும், இனிமை கூடி வருவதற்காகத்தான் போலும்!

பாரெங்கும் பரந்திருந்தருளும் பரம்பொருள், பால்சுரக்கும் பசுவின் காம்பெனக் காட்சி தரும் பதினோரு தலங்களில், தன் அருளை ஸ்வாமிகள் திருவாய் வாயிலாக வெளிக்காட்டியுள்ளமை, அவன் தாயினும் சாலப் பரிந்து நமக்குத் தண்ணளிப் பாலூட்டி ஆட்கொள்ள விரைந்துள்ளமையை விரித்துரைக்கின்றதே!

ஸ்வாமிகளின் அருட்புகழ் பாடல்களைத் திரட்டித் தரும் அறக் கட்டளையினரின் தொண்டு சிறக்க வாழ்த்துக்கள். அவர்தம் பணி கொண்டு பயன் காணும் அன்பர் கூட்டத்தின் சார்பாக நன்றிக் கராஞ்சலிகள். தேர் வடித்துத் தரும் கலைஞனை முதலாவதாக அத் தேரில் உலா எடுத்துச் செல்வது போல், இக் கடையேனையும் ஒரு பொருட்டெனக் கொண்டு, இந் நூல் வெளியீட்டில் பங்கு பற்றப் பணித்து, அவன் உள்ளத்தெழும் உணர்ச்சிகளை வடித்துத் தரச் சொல்லி அச்சிடவும் துணிந்த அறக்கட்டளை நிர்வாகியருக்கு என் உளங்கனிந்த நன்றி.

வணக்கம்.

(இரா.திருவுடையோன்)
R.ஸ்ரீதரன்.

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

# பதிப்புரை

சிவனையே பாடினார்கள் நால்வர் பெருமக்களும் காரைக்கால் அம்மையும். திருமாலை மட்டும் பாடினார்கள் ஆழ்வார்கள். அருணகிரிநாத ஸ்வாமிகள் முருகனையும் மயில் வாஹநம், வேல் ஆயுதம், சேவற் கொடி இவற்றையும் பாடினார். குமரகுருபர ஸ்வாமிகள் கணபதி, சிவபிரான், உமை, முருகவேள், கலைமகள் ஆகியோரைப் பாடினார். வடலூர் இராமலிங்க அடிகளார், விநாயகர், கந்தன், சிவபிரான், உமை, நடராஜர், சிவகாமி, திருமால், ராமர், இலக்குமி, ஸரஸ்வதி, துலுக்காணத்து இரேணுகை ஆகியோரைப் பாடியுள்ளார்.

அருணகிரியார் காலத்திற்குப் பிறகு ஐந்து நூற்றாண்டுகட்கு, இறைவன் ஸந்நிதிகளில் நின்று தன்னை மறந்து, கண்கள் மூடிய அருள் நிலையில் தமிழில் புதிய அருட்பாடல்களை யாரும் பாடியுள்ளதாக நமக்குச் சரித்திரம் இல்லை. 20–ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் 1952க்குப் பிறகு தான் அருட்கவி ஸேதுராமன் என்ற அந்தண இளைஞர் ஆழ்வார்கள், சைவ நால்வர், அருணகிரியார் பாணியில் தமிழில் புதிய பாடல்களைப் பாடத் தொடங்கினார். அவரது பாடும் பணி 1969–இல் துறவறம் ஏற்று அருட்கவி ஸாதூராம் ஸ்வாமிகள் என்ற தீட்சா நாமம் தாங்கி 10.3.2000–இல் ஸமாதி அடைந்தவரையில் தொடர்ந்து வந்தது.

ஸ்ரீ ஸாதூராம் ஸ்வாமிகள் எல்லாத் தெய்வங்களையும், பண்டைய அருளாளர்களையும் தற்கால மஹான்களையும், நவக்ரஹங்களையும் பாடியிருக்கிறார்கள். "ஸ்ரீ ஸாதூராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை", சென்னைத் திருக்கோயில்களில் அருட்கவி ஸ்வாமிகள் பாடிய அருட்புகழ்ப் பாடல்கள் சிலவற்றைச் சென்ற 3 ஆண்டுகளாக வெளியிட்டுவருகின்றது.

இந்த ஆண்டு 142 பாடல்கள் கொண்ட "நவக்ரஹ அருட்புகழ்" என்ற 72 பக்க நூலோடு, "ஐயப்பன் அருட்புகழ்" என்ற சிறு நூலையும், ஸ்வாமிகளின் 6வது ஆராதனை நாளில் (4–3–2006–இல்) வெளியிட வைத்த திருவருளுக்கு அறக்கட்டளை நன்றி செலுத்துகின்றது.

பதினோர் இடங்களில் பாடப் பெற்ற 109 ஐயப்பன் தோத்திரப் பாடல்கள் இதில் ராக தாளங்களுடன் இடம் பெற்றுள்ளன. மஹா சாஸ்தா எனப் பெறும் ஐயனார், அவதார மூர்த்தியான ஐயப்பன் என்ற இரு மூர்த்தங்களைப் பற்றிய பல செய்திகள் இப் பாடல்களில் காணப் பெறுகின்றன.

'ஐயனார்புர அருட்புகழ்' சின்னாள் கோடி அர்ச்சனை வழிபாட்டுக்காக அமைக்கப்பெற்ற ஐயப்பன் திருமுன் பாடப்பெற்றது. ஐயனார்புரக் கோயிலில் உள்ள ஐயப்பனுக்கு அப்பாடல்கள் பொருந்தும். சுவாமிகளின் பூர்வாச்ரமத் தங்கையின் கணவர் அவர்கள் குடியிருந்த வீடுகளில் நீடாமங்கலம், திருவாரூர் அருட்புகழ்கள் பாடப்பெற்றன. வீட்டில் பாடப்பெற்றாலும் ஒவ்வொரு பாட்டிலும் அந்தத் தலத்தின் பெயர் வருவதால் அந்தந்த ஊர்க் கோயில்களில் உள்ள ஐயப்பனுக்கே பாடல்கள் பொருந்தும். விருகை சாய்நகர் அருட்புகழில் கஸ்தூரித் தெருவின் பெயர் வருவதால் வீட்டு இறைவனுக்குத் தான் கொள்ளவேண்டும். நங்கை ஐயப்பன் இல்ல அருட்புகழ்ப் பாடல் ஒவ்வொன்றிலும் இல்லப்பெயர் வருவதால் அந்த வீட்டுப் பூஜை அறை ஐயப்பனுக்கு மட்டுமே பொருந்தும். (அந்த இல்லத்தில் பூஜை அறையில் உள்ள எல்லாத் தெய்வங்களுக்குமாக சுவாமிகள் 300–க்கும் மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது). ஊர் பெயர் இல்லாத பாடல்கள் பொதுத் தேவாரம், பொதுத் திருப்புகழ் போல எல்லா ஊர் ஐயப்பனுக்கும் பொருந்தும்.

இந்த 'ஐயப்பன் அருட்புகழ்' நூலுக்கு அழகியதோர் அணிந்துரை தந்து 4.3.2006–இல் அதனை வெளியிடவும் ஒப்புக்கொண்ட நங்கைநல்லூர் ஆன்மீக நூல் வெளியீட்டாளர் 'ஸ்வர்ணபுரி ட்ரஸ்ட்' ஸ்ரீ R. ஸ்ரீதரன் அவர்கட்கும், முதற் பிரதியைப் பெற்றுக்கொள்ள இசைந்த தீவிர ஐயப்ப பக்தரும் அறுபது முறைக்கு மேல் சபரிமலை சென்று தரிசித்துள்ளவருமான, என் தங்கை கணவர் ஸ்ரீ S. வேணுகோபாலய்யர் அவர்கட்கும், சிறந்த முறையில் கணினியில் கோத்து வடிவமைத்து அச்சிட்டுத் தந்த 'விஷுவல் கிராபிக்ஸ்' ஸ்ரீ R. அப்பாசாமி அவர்கட்கும் என் மனமார்ந்த பணிவான நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஐயப்ப பக்தர்கள் ஆண்டுதோறும் பெருகிவரும் இந் நாளில் அவர்கள் இந் நூலை வாங்கிப் படித்துப் பாடி ஐயப்பனின் பேரருளைப் பெற்று வாழ அருளுமாறு குருவருளையும் திருவருளையும் வழுத்துகின்றேன்.

பொங்கி மடாலயம், நங்கைநல்லூர், சென்னை–61.
01–03–2006

**ஸு.வே. ஸுப்ரம்மண்யன்**
மேனேஜிங் ட்ரஸ்டி, பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்

உ

# அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய ஐயப்பன் அருட்புகழ்

## I. ஐயனூர்புரம் ஐயப்பன் அருட்புகழ்

(சென்னை— ஐயனூர்புரத்திற் கோடி அர்ச்சனை நடந்த ஐயப்பஸ்வாமி திருவுருவத்தின் திருமுன் 28—12—1962—இல் திருவாய் மலர்ந்தருளப் பெற்றது)

ராகம்—தோடி) **(எழுசீரடி ஆசிரிய விருத்தம்)** (தாளம்—ஆதி

### ஐயனூர் அவதாரம்

1. பூமியே புகழப் புரிதவன் பற்பா
சுரன்பெற வரம்தரு புராரி
நேமியே றங்கை நிமலன்மோ கினியாம்
நெடியமா லைப்புணர்ந் துணர்ந்து
நேமியோர் மகிழ நினைந்துபெற் றருள்சேய்!
நின்பெயர் முன்புகொள் புரத்தெம்
சாமியே! சரணம் சரணம்ஐ யப்பா!
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (1)

*குறிப்புரை : பற்பாசுரன்—பத்மாசுரன். நேமி—சக்கரம். நேமியோர்—உலகோர். நின்பெயர் முன்பு கொள்புரம்—ஐயனார் புரம்.*

### ஐயனாரின் திருநாமங்கள்

2. கையனூர் காரி சாத்தனூர் கருமா
காளனை ஆள்எனக் கொள்வோன்
ஐயனூர் அருஞ்செண் டாயுதன் ஆனை
வாகனன் ஆதிய பெயராய்!
பொய்யனும் எனையாள் ஐயனூர் புரத்தெம்
பூரணை புட்கலை கொழுநா!
தையல்நா யகிசேய்! சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (2)

*கையனூர்—கையில் அவதரித்தவர். காரி—ஐயனூர். மாகாளன்—ஐயனூர்க்குப் பணியாள்.*

### ஐயனூரின் அண்ணன்மார்கள்

3. தாரகா சுரன்ஓர் ஆனையா வரவும்
தான்அதை ஊர்ந்தனை பரியாப்
பாரகா வியமாம் பாரதம் மலையிற்
பதித்தஆ னைக்கும்வை ரவற்கும்
ஏரகா திபற்கும் வீரபத் திரற்கும்
இளையனே! ஐயனூர் புரத்தாய்!
தாரகா ரியைநேர் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (3)

*தாரகாசுரன்—சூரபத்மனின் தம்பியான ஆனைமுக அரக்கன். ஏரக அதிபன்—திருவேரகம் என்னும் நான்காம் படைவீட்டின் தலைவனாம் ஸ்வாமிநாத ஸ்வாமி. தாரக அரி—முருகப் பெருமான்.*

### மாகாளர் மூலம் இந்திராணிக்கு உதவியமை

4. இந்திரன் மனைவி சசிஅயி ராணி
   என்பவள் அஜமுகி என்பாள்
தந்திர வலையுள் அகப்படும் தருணம்
   தனியவள் ஓலமிட் டிறைஞ்ச
மந்திர வாள்கை மருவுமா காளர்
   வழிஉத வையனூர் புரத்தாய்!
சந்திர முகம்கொள் சாமியே! சரணம்
   சரணம்ஐ யப்ப! நின் சரணே. (4)

*சசி, அயிராணி—இந்திராணி. அஜமுகி—சூரபதுமனின் தங்கை.*

### புலிமிசை வந்ததும், புலிப்பால் கொணர்ந்ததும்

5. பந்தள மன்னன் பண்ணுமெய்த் தவத்தாற்
   பாலகன் எனமுனர் சென்று
கொந்தள பாரத் தரசிக்குப் புலிப்பால்
   கொணர்ந்தனை புலிமிசை ஏறி
வந்தனை நாட்டில் நன்மணி கண்டா!
   வான்புகழ் ஐயனூர் புரத்தில்
தந்தனை அருளைச் சாமியே! சரணம்
   சரணம்ஐ யப்ப! நின் சரணே. (5)

*கொந்தளம்—கூந்தல். வான்—வானவர்.*

### மகிஷியைக் கொன்றதும், சபரியில் நின்றதும்

6. வானவர் மருள மற்றவர் கருள
   மாயங்கள் செய்தபேய் மகிடி
ஆனவள் கொட்டத் தாணவம் அடக்கி
   ஆண்டருள் புரிந்தனை எந்தாய்!
மானவர் யாரும் வணங்கிடும் சபரி
   மலையனே! ஐயனூர் புரத்தாய்!
தானவர் மதஞ்சாய் சாமியே! சரணம்
   சரணம்ஐ யப்ப! நின் சரணே. (6)

*கருள—இருள் மூடப்பெற. மகிடி—எருமைமுக அரக்கி. மானவர்—மனிதர். மதம் சாய்—ஆணவ மலத்தைத் தொலைக்கும்.*

### சபரி யாத்திரை செய்யும் முறை

7. பத்தர்தாம் பலரும் தீர்த்தங்கள் அழுதை
   பம்பையா திகளில்நீ ராடி
முத்தர்போல் இருந்து விரதங்கள் முயன்று
   முழுப்பெரு மூச்சுடன் முனைந்து

**சித்தர்போல் நடந்து தெரிசனை காணும்**
**தேவனே! ஐயனூர் புரத்தாய்!**
**தத்தர் தாம் பயந்த சாமியே! சரணம்**
**சரணம்ஐ யப்ப! நின் சரணே. (7)**

*அழுதை–அழுதாநதி. பம்பை–பம்பா நதி. தத்தர்–தத்தாத்திரேயர்; மூவராய மூர்த்தி.*

## ஊர்க் காவல் தெய்வம்–மா யோகமூர்த்தி

**8. ஊர்தொறுங் காவல் தெய்வமாய் இருந்தே**
**உலகினில் எங்கணும் உறைவாய்!**
**பார்தொறும் பரவும் பகவனே! தவமே**
**பண்ணுமெய் யோகமுத் திரையாய்!**
**வேர்தொறும் அருளே விளைதருக் காசி**
**விசுவம்வாழ் ஐயனூர் புரத்தாய்!**
**சார்தொறும் அருளும் சாமியே! சரணம்**
**சரணம்ஐ யப்ப! நின் சரணே. (8)**

*காசி....புரத்தாய்–காசி விச்வநாதர் கோயில் ஐயனூர் புரத்தில் உள்ளது. கோயிலின் அருகில் திடலில் கோடி அர்ச்சனை நடந்தது.*

## மகர விழாவினன் மறுபிறப் பறுப்பவன்

**9. பூதங்கள் சூழப் புடைபரி வாரம்**
**போகநல் ளிராவுலா வருவாய்**
**காதங்கள் பலவும் புரவியிற் செண்டும்**
**சாட்டையும் கையுமாய்க் கடிதே;**
**மாதங்கள் தம்முள் மகரப்பேர் விழவாய்!**
**மணிக்கள! ஐயனூர் புரத்தாய்!**
**ஜாதங்கள் அறுக்கும் சாமியே! சரணம்**
**சரணம்ஐ யப்ப! நின் சரணே. (9)**

*புடை–பக்கத்தில். காதங்கள்–10 மைல்கள். புரவி–குதிரை. செண்டு– ஐயனூர் ஆயுதம். கடிதே–விரைவில். மகரம்–தை. விழவாய்–விழா வினனே. களம்– கழுத்து, கண்டம். ஜாதங்கள்– பிறவிகள்.*

## ஐயப்பனின் தாய்மார்கள்

**10. கார்நிறக் கடவுள்! கமலைநின் தாயோ!**
**கமலையின் கணவனே தாயோ!**
**கார்நிறக் கவுரி தான்ஒரு தாயோ!**
**காசினித் தாய்ஒரு தாயோ!**
**ஏர்நிறத் தெந்தாய்! இயம்பிடல் வேண்டும்**
**ஈதெனக் கையனூர் புரத்தாய்!**
**தார்நிறம் மருவும் சாமியே! சரணம்**
**சரணம்ஐ யப்ப! நின் சரணே. (10)**

*தார், நிறம் மருவும்–நிறம்–மார்பில், தார்–மாலை, மருவும்–விளங்கும்.*

## உடல் நோய், உயிர்நோய் ஒழிப்பவன்

11. அரிகர சுதனே! ஐயன்ஐ யப்ப
சாமியே! அவனிகா வலனே!
பரிகரம் பலர்தம் பவத்துக்கும் நோய்க்கும்
பாதகப் பாவத்துக் கும்செய்
தரிகரச் சின்முத் திரையனே! சவரி
சயிலனே! ஐயனூர் புரத்தாய்!
கரிகர மயல்தீர் சாமியே! சரணம்
கருணைஐ யப்ப! நின் சரணே. (11)

*அரிகரசுதன்–திருமாலுக்கும் சிவனுக்குமாகத் தோன்றிய பிள்ளை. அவனி–பூமி. பரிகரம்–பரிகாரம். தரிகர–கரம் தரி–கையில் காட்டிய. கரிகரம்–கலவி இன்பம்.*

## கலியுகத்திற் கண்கண்ட கடவுள்

12. மெய்யப்பன் என்று விண்ணில்உள் ளோரும்
மேதினிக் கண்ணுறை வோரும்
ஐயப்ப நின்னைச் சரண்என அடைவர்
அவனியிற் கண்கண்ட தெய்வம்
கையப்ப! நின்னை அன்றிவே றூர்சொல்
கலியுகத் தையனூர் புரத்தாய்!
தையப்ப னும்எம் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (12)

*மேதினி–உலகம். கையப்ப–கையிற் பிறந்தவ. சின்முத்திரைக் கையன் எனினுமாம். தை அப்பன்–தை மாதத்தில் முதல் நாளன்று சிறப்பிக்கப் பெறுபவன்.*

## விரதம் அநுஷ்டிக்கும் முறை

13. காருடை கொண்டு காமங்கள் அகற்றிக்
கடும்பசி துயில்எலாம் மறந்து
பேருடை நின்றன் நாமமே பேசும்
பெற்றிஐ யப்பன்மார் பலபேர்
ஊருடை உறவை ஒழித்துவந் திறைஞ்சும்
ஒருத்தனே! ஐயனூர் புரத்தாய்!
தாருடை உரத்தெம் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (13)

*கார்–கருப்பு. தார்–மாலை. உரம்–மார்பு.*

## ஐயப்பனின் ஐந்து முதன்மை இடங்கள்

14. ஆரியன் காவு காந்தநன் மலைப்பொன்
னம்பலம் அச்சன்றன் கோயில்
பேரியற் குளத்துப் புழையொடு சபரிப்
பேர்மலை ஐந்திலும் உறைவாய்!

யாரியார் எதுகேட் பார்களோ அருளும்
ஈசனே! ஐயனூர் புரத்தாய்!
சாரியல் பார்சேர் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (14)

*ஆரியன் காவு, காந்தமலைப் பொன்னம்பலம், அச்சன் கோயில், குளத்துப் புழை, சபரிமலை இவை ஐந்தும் ஐயப்பனின் இருக்கைகள். சார் இயல்பார்– பக்தி சார்ந்த குணத்தினர்.*

## பந்தளத்துத் தெய்விக பாலகன்

15. பற்பலர் பழிச்சும் பழங்குல தெய்வம்!
பந்தளத் தேபன்னி ரண்டாண்(டு)
அற்புதம் பலசெய் சேவக னாய்நின்(று)
அரும்பெருங் கடவுண்மை மறைத்தாய்!
கற்பனை கடந்த கவினுக்கோர் முடிவாம்
கடவுளே! ஐயனூர் புரத்தாய்!
தற்பலம் உடைய சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (15)

*பழிச்சும்–புகழும். பந்தளம்–மலையாளத்தில் ஒரு நாடு. கவின்–அழகு. தற்பலம்–தானே பெற்றுள்ள வல்லமை.*

## பதினெட்டுத் தத்துவப் படிகளுக் கப்பாலான்

16. உரைபதி னெட்டுத் தத்துவ உண்மை
உயர்பதி னெட்டெனும் படியா
நிரைதர அமைய அவற்றையும் கடந்து
நீத்ததோர் இடம்என திடம்என்(று)
உரைதர உட்கார்ந் திருப்பதே போல
உள்ளனை! ஐயனூர் புரத்தாய்!
தரைதனிற் புகழ்சால் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (16)

*நிரைதர–வரிசையாக. உரைதர–கூற. தரை–உலகு.*

## மகர விளக்கு உகக்கும் வள்ளல்

17. நெய்விளக் கேற்றித் திருவிளக் குகளால்
நிரைஅமைத் துனைவழி படுவார்
கைவிளக் கின்றிக் கயிலையுங் காண
வல்லவர் கண்டுகொண் டனனூல்;
மெய்விளக் கேற்றி நெஞ்சினுள் வைத்தேன்
வீற்றருள்! ஐயனூர் புரத்தாய்!
தைவிளக் குகக்கும் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரணே. (17)

*மெய்விளக்கு–உண்மை என்னும் தீபம். தை விளக்கு–மகர தீபம்.*

### ஸமரஸத் தெய்வம் தாஸர் தயாளன்

18. எம்மதத் தோரும் எம்மர போரும்
எம்மொழி பேசிடு வோரும்
சம்மதத் தோடே சாமியே! சரணம்!
சரணெனிற் பிறப்பிலை அவர்க்கே;
மும்மதத் தோனை மூத்தவ னுக்கொள்
முதல்வனே! ஐயனூர் புரத்தாய்!
தம்மதத் தவர்சார் சாமியே! சரணம்
சரணம்ஐ யப்ப! நின் சரனே. (18)

*மும்மதத்தோன்–பிள்ளையார்.*

### ஸ்ரீ ஐயப்பன் துதி (தனிப்பாடல்)
### (ஏழுசீரடியாசிரிய விருத்தம்)

19. சரணம்ஐ யப்ப சாமியே! சரணம்
சரணம்பொன் ஐயப்ப! சரணம்
சரணம்ஐ யப்ப சாமியே! சரணம்
சரணம்பொன் ஐயப்ப! சரணம்
சரணம்ஐ யப்ப சாமியே! சரணம்
சரணம்எம் ஐயனூர் புரத்தாய்!
சரணம்ஐ யப்பா! சரணம்ஐ யப்பா!
சரணம்ஐ யப்ப! நின் சரனே.

- (ஐயனூர்புரம் ஐயப்பன் அருட்புகழ் முற்றும்) -

## II. நீடாமங்கலம் ஐயப்பன் அருட்புகழ்

(எண் 17, வடக்குத் தெரு, ஸ்ரீ எஸ். வேணுகோபாலய்யர் அவர்கள் இல்லத்தில் பாடியருளப் பெற்றது.)

நவரோஸ்) ('பொன்னார் மேனியனே' போல் பாடல் இலக்கணம்) (ஆதி

20 கொங்கலர் வான்சொரியும் சப ரிக்குன்றம் கோட்டமுளாய்!
வெங்கலன் மாபணியா விழைந் தான்விழை மோஹிநிமான்
தங்கலர்க் கையகத்தே அவ தாரம்செய் தாய்! நீடா
மங்கலம் மேயவரின் பொருள்! ஐயப்ப வாழ்வருளே.

*கொங்கு அலர்–வாஸனைப் புஷ்பம். கலன், பணி–ஆபரணம். பொருள்–மகன்.*

- (நீடாமங்கலம் ஐயப்பன் அருட்புகழ் முற்றும்) -

---

நீடாமங்கலக் கோயிற் சிவபிரானாம் காசி விச்வநாதர், விசாலாக்ஷியம்மை, கணபதி, முருகவேள், ஸந்தான ராமர், அநுமன் ஒவ்வொருவர் பேரிலும் பாடல்கள் வாழ்த்துடன் வந்துள்ளன. மொத்தப் பாடல்கள் 8.

# III. ஸ்ரீ ஐயப்பன் திருப்பள்ளி எழுச்சி

(13–1–1966 அன்று அருளிச் செய்யப் பெற்றது)

பூபாளம்) **(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)** (ஆதி

21. பூக்கள் மலர்ந்தன பொலிகயம் தோறும்
பூங்கழு நீர்கள்கை கூப்பிஒண் புலரி
நோக்க வரும்கதிர்க் கஞ்சலி செய்வ;
நுண்ணிடை மாதர்கள் நீராட வந்தார்
காக்கை கரைந்தது; கொக்கறு கோஎன்
கத்தொலி செய்தது குக்குடம்; எங்கள்
ஆக்கையொ டாக்கமும் ஆவியும் ஆன
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (1)

*பொலி கயம்–விளங்கும் குளம். புலரி–விடியற்காலை. குக்குடம்–கோழி. ஆக்கம்–செல்வம்.*

22. பஞ்சன மெல்லடிப் பதுமைபூ ரணையாள்
பாவைநேர் புட்கலை பன்னிமார் இருவர்
மஞ்சனே! ஊமையை வாய்திறப் பித்த
மதலையே! கேரளப் பந்தள மன்னன்
மஞ்சனே! கஞ்சநற் கண்ணனும் கண்ணன்
மணிகண்டன் மைந்தனும் மணிகண்ட வள்ளால்!
அஞ்சன வண்ணத்துத் துஞ்சிருள் மேனி
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (2)

*பன்னி–பத்திநி, மனைவி. மஞ்சனே–கணவனே. மஞ்சனே–மகனே. கஞ்சநற்கண்–நல்ல தாமரை போன்ற கண்கள். மணிகண்டன்–சிவன். அஞ்சனம்–கருமை.*

23. தங்கவண் ணக்குழம் பொளிர்தழற் பிழம்புச்
சக்கரம் ஒன்றுபைந் நீர்கருந் தரைமேல்
துங்கவண் ணத்தெழுந் துருள்தல்போல் எல்லோன்
தோன்றினன் பசுமைநீல் கருமைசால் கடல்மேல்
வங்கவண் ணப்புனல் போற்கடல் நீரும்
வயங்கத் தொடங்கிற்று வண்கதிர் ஒளியால்
அங்கவண் ணத்தெழில் ஆண்டவ னே!எம்
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (3)

*வண்ணம்–நிறம். தழல்–நெருப்பு. எல்லோன்–சூரியன். புனல்–நீர். வயங்க–விளங்க.*

24. மெய்ம்மையப் பன்தொப்பை யப்பன்வீ ரப்பன்
வீரபத் திரன்வைர வன்ஸம்பந் தப்பன்
எம்மையப் பன்குரு தாயாம்கந் தப்பன்
இவர்தமக் கப்பன்எம் ஒப்பிலி யப்பன்
செம்மையப் பன்செழுஞ் செஞ்சடை யப்பன்
சிகுங்கடி வனப்பகை அப்பனுக் கப்பன்

அம்மையப் பன்விண்டு வைப்புணர்ந் தீன்ற
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (4)

*தொப்பையப்பன்–கணபதி. சிங்கடி வனப்பகை அப்பன்–சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள். விண்டு–விஷ்ணு.*

25\. உடுபதி தண்ணொளி குன்றினன்; அற்றே
உடுக்களும் ஒளிமழுங் குற்றன; சற்றே
தொடுகடல் வானத்திற் செவ்வொளி துலங்கத்
தோன்றினன் அருணனும் அருக்கன்ஸா ரதியாய்க்
கடுவனும் மந்தியும் பறழ்களும் வரியும்
கரிகளும் திரிதரும் சபரியங் கிரியாய்!
அடுதிறல் அரக்கியாம் மஹிஷியைக் கொன்ற
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (5)

*உடுபதி–சந்திரன். உடு–நக்ஷத்திரம். அருக்கன்–சூரியன். கடுவன்– ஆண் குரங்கு. மந்தி–பெண் குரங்கு. பறழ்–நாற்கால் பிராணிகளின் குட்டிகள்.*

26\. கையன் புறத்தவன் கடல்வண்ணன் சாத்தன்
காரிவெள் ளானைபச் சைப்பரி யுள்ளோன்
நொய்யலர் நெய்தல்பூண் டோன்கோழிக் கொடியோன்
நுவல்வளை செண்டுதன் டணிந்தவன் சாஸ்தா
துய்ய உயோகிமா சாத்தன்எண் கரத்தோன்
தொல்லறங் காவலன் சாதவா ஹனன்மற்(று)
ஐயன்நல் அரிஹர ஸுதன்எனப் பெயர்கொள்
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (6)

*கையன்–கையிற் பிறந்தவன். புறத்தவன்–ஊர்க்கு வெளியில் கோயில் கொண்டவன். காரி–ஐயனார். நொய்–மென்மை. நெய்தல்–அல்லிப்பூ. நுவல்–சொல்லப்பெறும். வளை–சக்கரம். உயோகி–யோகி. சாத வாஹநன்–ஐயனார்.*

27\. அங்கயன் பங்கயன் அநுஜனும் அரசே!
ஐயப்பன் மார்பலர் ஐயப்ப! சரணம்!
அங்கயற் கண்ணுமை கங்கைசேய்! சரணம்!
அம்புய மின்புவி மின்ஸுத! சரணம்!
வெங்கய மற்றய வாஹன! சரணம்!
வேதத்தின் உட்பொருள் ஆனவ! சரண்என்(று)
அங்கயன் இந்திரன் போற்சரண் விளிக்கும்
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (7)

*அங்கயன்–அங்கசன்–மன்மதன். பங்கயன்–தாமரையில் வந்த பிரமன். அநுஜன்–தம்பி. அரன் புதல்வன் ஆனதால் கங்கைக்கும் மகன் ஆனான். திருமாலின் மகன் ஆனதால் ஸ்ரீ தேவி பூதேவி இருவர்க்கும் பிள்ளையானான். அம்புயமின்–இலக்குமி. புவி–பூமி. கயம்–கஜம்–யானை. அயம்–குதிரை.*

28\. சூரியன் செவ்வொளி கண்டுசெங் கமலம்
ஸுந்தர மாய்க்கண் மலர்ந்தென மலரச்
சீரிய தாமரை முகமலர்ந் தினைய
சிறுமியர் ஒருத்தரை ஒருத்தர்தாம் வந்த

காரியம் செப்பப்போய்க் கண்துயில் எழுப்பும்
காலமும் ஆயிற்று காலைநல் வேலை
ஆரியன் காவுறை ஆரிய னே!எம்
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (8)

*மலர்ந்தென—மலர்ந்தது என்னும்படி. இனைய—என்று சொல்லும்படியாக. வேலை—வேளை.*

29. அச்சன்கோ யில்குளத் துப்புழை திரியம்
பகபுரம் காந்த மலைப்பொன்னம் பலம்பூத்
தச்சன்கோ யில்நிறை தடங்கள்சூழ் பம்பைத்
தடினியங் கரைஎரு மைவேலி உறைவோய்!
எச்சன்கோ யிற்றிரு வரங்கள்எண் கண்ணன்
இந்திரன் சந்திரன் இவர்மகத் தடிதாழ்
அச்சன்கோ யிற்றிருப் பாலகன் ஆகும்
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (9)

*பூத் தச்சன்—பூமியைப் படைக்கும் தச்சனாம் பிரமன். கோயில்—இருப்பிடமாம் தாமரை. தடம்—குளம், குட்டை. தடினி—நதி. எச்சன்—யாகத் தலைவன். எண்—எட்டு. மகம்—யாகம். அச்சன்—தந்தை. கோயில்—சிவாலயம்.*

30. தாயுறு நோய்தவிர் காரணம் புலிப்பால்
தனைக்கொணர்ந் திடவனம் திரிந்ததன் களைப்போ?
பேயுறு மஹிஷியைச் சங்காரம் செயும்முன்
பெண்ணென இரங்கிக் காலந்தாழ்த்த இளைப்போ?
தீயுருச் சிவன்அரி பயந்தமை யால்தாய்
சேய்உனக்(கு) யார்எனும் கவலையாற் சோர்வோ?
ஆயுறும் காரணம் ஏதினும் துயில;
ஐயப்ப னே! பள்ளி எழுந்தரு ளாயே! (10)

*தாய்—பந்தள ராஜனின் மனைவி. பேய்—பேயின் குணத்தை. உறு—கொண்டிருந்த. பயந்தமை—பெற்றமை. ஆய்உறும்—ஆராய்வதற்குற்ற.*

- (ஸ்ரீ ஐயப்பன் திருப்பள்ளி எழுச்சி முற்றும்) -

# IV (A). நுங்கை ஐயப்பன் இல்லம் அருட்புகழ்

(எண் 4, ஜகந்நாதன் சாலை, ராமலிங்காபுரம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034 திரு. டன்லப் என். க்ருஷ்ணையர் அவர்கள் இல்லம்—பூஜை அறை 13-1-1963—இல் பாடியருளியது)

தோடி) **(எழுசீரடி ஆசிரிய விருத்தம்)** (ஆதி

31. பூதவா கனற்கும் மாயமோ ஹிநிக்கும்
புதல்வனே! முதல்வனே! புகல்ஜீ
மூதவா கனன்றன் மனையைமுன் காத்த
முத்தனே! அறத்தின்கா வலனே!
சாதவா கனனே! கோழிஅம் கொடிக்கைச்
சாமியே! தருமசாத் தாவே!

வேதவா கனற்குத் தம்பின் !ஐ யப்பன்
வீட்டினுய் ! விரைந்துகாத் தருளே. (1)

*பூத வாகனன்–சிவன். ஜீமூத வாகனன்– மேகங்களை வாகனமாகக் கொண்ட இந்திரன். மனை–மனைவியாம் இந்த்ராணி. காத்த–மாகாளர் மூலம் பாதுகாத்த. அறத்தின் காவலன்–தர்ம சாஸ்தா. சாத வாகனன்–ஐயனுர். கோழி..... சாமி–முருகனைப் போல் ஐயனுரின் கொடியும் சேவல். வேத–வேதங்களைச் சொன்ன. வாஹ அ(ன்)னற்கு–அன்னப் பறவையை வாகனமாக உடைய பிரம தேவர்க்கு. தம்பின்–தம்பி. பிரமன் திருமாலின் புதல்வன். ஐயனுரும் விஷ்ணுவாம் மோகினியின் புத்ரர். ஆதலால் பிரமனுக்குத் தம்பியானுர்.*

## IV (B). நுங்கை ஐயப்பன் இல்லப் பல்பாப் பதிகம் (அந்தாதித் தொடை)

(1–10–1966 புரட்டாசி சனிக்கிழமை அன்று ஐயப்பன் இல்லத்தில் மேல் மாடியில் திருவாய் மலர்ந்தருளியது. 8.30-9.40 P.M.)

ஆனந்தபைரவி) **(குறள் வெண்பா)** (சுத்தாங்கம்

32. திருமருவும் ஐயப்பன் இல்லத்தோய் ! தெய்வத்
திருமருவ வைக்கும்உன் கைச் செண்டு. (1)

மோகனம்) **(14 சீர் விருத்தம்)** (சுத்தாங்கம்

33. செண்டணிந் தவன்யோகி வளைஏந்தி கடல்வணன்
சிங்கஊர் தியன்ஆரி யன்
தெய்வவெள் ளானைவா கனன்அறங் காவலன்
சிவன்அரி திருக்குமா ரன்
தண்டணிந் தவன்நீல ஆடையன்மெய் வீரன்மா
சாத்தன்வெம் புலிவா கனன்
தண்புறத் தவன்என் கரத்தினேன் பச்சைச்
சயிந்தவம் நயந்தேறு வோன்
வண்டணிந் தொளிர்நெய்தல் மாலையன் மகாபூத
வாகன ஜகன்மோகனன்
மணிகண்டன் என்றிவா றெண்ணில்பல பேர்உற்ற
வண்சபரி மலைவாண னே !
உண்டணிந் துடையுடுத் தூனத் துறங்கிஇவண்
உயிர்விடும் கூட்டத் துரு(து)
உய்யப் பணித்தி !எனை ஐயப்பன் இல்லத்
துகந்துவாழ் ஐயப்ப னே ! (2)

*சயிந்தவம்–குதிரை. பணித்தி–பணி செய்யவைப்பாய். உகந்து– விரும்பி.*

மத்யமாவதி) **(நேரிசை வெண்பா)** (சுத்தாங்கம்

34. ஐயப்பன் இல்லத் தணிநுங்கை அங்கமரும்
ஐயப்ப ! பொய்ப்பொருள்மேல் ஆசைஅறுத்–துய்யப்பா

**மெய்ப்பொருள்மேல் ஆசை மிகவைத் தெனவிளம்பிக்**
**கைப்பொருள்மிக் கீந்தெனைநீ கா. (3)**

*விளம்பி—சொல்லி. ஈந்து—தந்து.*

பைரவி) **(கட்டளைக்கலித்துறை)** (சுத்தாங்கம்

**35. காமன் திருமகள் சுந்தர வல்லி ககனவல்லி**
**பூமன் துணைவா! உருத்திரன் என்றுனைப் போற்றுமறை**
**நாமம் பலவாய் நவின்றங்ஙன் நானும் நவில்வன்நுங்கைத்**
**தாமம் தனிற்பொலி ஐயப்பன் இல்லம் தழைந்தவனே. (4)**

*காமன்—மன்மதன். திரு—இலக்குமி. சுந்தரவல்லி—வள்ளி. ககன வல்லி—தேவயானை. பூமன்—பிரமன். துணைவா—உடன்பிறந்தோனே. தாமம்—இடம்.*

காம்போதி) **(எண்சீரடி யாசிரிய விருத்தம்)** (ஆதி

**36. தவநேய! வளைசெண்டு சூலமுத்ரை அபயம்**
**தண்டம்பா சாங்குசம்நீள் ஜானுவின்மேல் இடக்கை**
**நவமேய எண்கையனே! சோழன்முனுள் வணங்க**
**நல்லசெண்டு நல்கிநக மேருவிற்பொன் அளித்தோய்!**
**சிவநேயர் தினம்வணங்கும் திருவடிகள் இரண்டும்**
**செல்வமலி ஐயப்பன் இல்லத்தே திகழ**
**அவமாய மாயைஎலாம் மாயஅருள் பொலிய**
**அமைத்தனைஉன் திருவருளால் ஆச்சரியம் ஈதே. (5)**

*ஜானு—முழங்கால். அவம் ஆய—வீண் ஆன.*

நாதநாமக்ரியை) **(எண்சீரடி யாசிரிய விருத்தம்)** (ஆதி

**37. தேவ தேவ!நின் சீரடி தொழுதேன்**
**சித்த மாம்புலி அகந்தையாம் சிங்கம்**
**மாவ லாண்மைத்தாம் மனமெனும் குதிரை**
**மத்த மாகஜம் புத்திஇந் நான்கும்**
**ஜீவன் நான்உனக் கூர்தியா விடுத்தேன்**
**செலுத்த வேண்டும்நீ ஐயப்பன் இலத்தோய்!**
**ஆவ லாய்உன பரிகளைப் போல;**
**அன்றேல் உய்விலை அடியனேற் கையே. (6)**

*சீறடி—சிற்றடி. ஊர்தி—வாகனம். பரி—குதிரை.*

தோடி) **(அறுசீரடியாசிரிய விருத்தம்)** (ஆதி

**38. ஐயம்ஒன் றுண்டு போலும் ஆதலாற் றுனே பேரும்**
**ஐயன்என் றமைந்த தைய! ஐயப்பன் இல்லத் தைய!**
**ஐயமர் கமலை நீளை அவனிமா தாவை எல்லாம்**
**ஐயகோ! உறவெவ் வாற்றுன் அறைந்தவண் அழைப்ப தென்றே. (7)**

*ஐயம்—சந்தேகம். ஐ—அழகு. கமலை—இலக்குமி. நீளை—நீளாதேவி. அவனி—பூமி. ஐ அமர்*

*கமலை....அழைப்ப தென்றே– திருமால் தனக்குத் தாயாய் இருக்க, இலக்குமி, பூதேவி, நீளாதேவி இம் மூவரையும் என்ன உறவு சொல்லித் தான் அழைப்பது என்று சாஸ்தா மூக்கின் மேல் விரலை வைத்துள்ளார் என அப்பைய தீட்சிதர் எழுதியுள்ள ச்லோகம் வருமாறு. "அம்பேதி லக்ஷ்மீம் அஹம் ஆஹ்வயாமி பத்ந்ய: பிதுர் மாதரஏவ ஸர்வா: கதம்நு லக்ஷ்மீம் இதி சிந்தயந்தம் சாஸ்தாரம் ஈடே ஸகலார்த்த ஸித்யை".*

தன்யாசி) **(கலிவிருத்தம்)** (ஆதி

**39.** **என்று போல்ஒளிர் ஐயப்பன் இல்லத்திற்**
**குன்று போல்ஒளிர் கோமளத் தெய்வமே!**
**ஒன்று வேண்டுவன் உன்னை மறக்கொணு**
**நன்று நின்றெந்த நாளும் நிலவவே.** **(8)**

*என்று–சூரியன். கோமளம்–அழகு.*

ஹரிகாம்போதி) **(எண்சீரடி யாசிரிய விருத்தம்)** (சுத்தாங்கம்

**40.** **நிலவனைய திருமுகத்தோய்! நெய்மு ழுக்கில்**
**நிதம்மகிழும் தைவிளக்குத் திருவி ழாவோய்!**
**குலவினிய அழுதைபம்பை எருமை வேலி**
**கோயில்கொளும் அம்பலம்ஐந் துடைய கோவே!**
**நிலவருள்சேர் வாபரற்குக் கருணை காட்டி**
**நெடிதாண்ட மலையாள நேய நாடா!**
**உலவருளால் உலகெங்கும் ஆட்சி செய்யும்**
**ஒருவன்எனும் ஐயப்பன் இல்லத் தோனே.** **(9)**

சங்கராபரணம்) **(எழுசீரடி ஆசிரிய விருத்தம்)** (ஆதி

**41.** **ஐயப்பன் இல்லத் தமர்ந்தருள் செய்யும்**
**அரிகர சுதன்எனும் நாமக்**
**கையப்ப! தெற்கிற் பந்தள வேந்தன்**
**காதலி காரணம் புலிமேல்**
**மெய்யப்பன் என்று பால்கொணர்ந் தனைநின்**
**மேட்டிமை யார்சொல வல்லார்?**
**தையப்ப! கருணை செய்யப்ப! என்மேல்;**
**சரண்புகுந் தேன்உன சரணே.** **(10)**

*காதலி–மனைவி. பால்–புலிப்பால். மேட்டிமை–பெருமை. சரணே– திருவடிகளில்.*

சுருட்டி) **(கலிவிருத்தம்)** (ஆதி

**42.** **சரணென் றெழுவார் தன்ஐயப் பனிலத்(து)**
**அரணம் பெறுவார் அரசன் அருளால்**
**மரணம் ஜனனம் மருவார்; பொருளைத்**
**திரணம் புரிவார்; திகழும் திருவே.** **(11)**

*அரணம்–பாதுகாப்பு. திரணம் புரிவார்–துரும்பு போல் நினைப்பர்.*

- (நூங்கை ஐயப்பன் இல்லம் அருட்புகழ் முற்றும்) -

# V. ஐயப்பன் அருட்புகழ்ப் பதிகம் (அந்தாதித் தொடை)

(நங்கைநல்லூர்க் குஹாநந்த மண்டலி (பழைய எண் 125, புதிய எண் 42, கல்லூரிச் சாலை)யில் 6–2–1967–இல் பாடப்பெற்றது)

நாதநாமக்ரியை) **(கலிவிருத்தம்)** (ஆதி

**43.** **ஐயன் ஆரியன் ஆரியன் காவுறை**
**மெய்யன் மேனி கரியவன் விண்டுவின்**
**கையன் காரி கருங்கடல் வண்ணத்தெம்**
**துய்யன் காந்த மலைச்சுடர்ச் சோதியே.** **(1)**

*விண்டு–விஷ்ணு. கையன்–கையிற் பிறந்தவன். துய்யன்–தூய்மையன்.*

**44.** **சோதி ஐயப்பன் சுந்தர மேனியன்**
**ஆதி ஐயப்பன் அச்சன்கோ யிற்கிறை**
**பூதி ஐயப்பன் போற்றுவார் புந்தியுள்**
**நீதி ஐயப்பன் நின்மல மூர்த்தியே.** **(2)**

*பூதி–செல்வம். புந்தி–உள்ளம்.*

**45.** **மூர்த்தி யாய்இந்த மூவுல கத்தைஆண்(டு)**
**ஆர்த்தி தீர அடியார்க் கருள்பவன்**
**கார்த்தி கேயனின் சோதரன் காமங்கள்**
**பூர்த்தி செய்தருள் புண்ணிய நாதனே.** **(3)**

*ஆர்த்தி–ஆசை. சோதரன்–உடன் பிறந்தான்.*

**46.** **நாதன் பூரணை புட்கலை நங்கைமார்க்(கு)**
**ஓத நல்ல ஒருத்தன் உருத்திரன்**
**கோத றும்குளத் துப்புழை கோயில்கொள்**
**வேத போத விளக்கொளி காண்மினே.** **(4)**

*கோது அறும்–குற்றம் அற்ற.*

**47.** **மின்னு மெல்லிடை வேயுறு தோளிபேர்**
**பன்னு மாபதி பாற்கடற் றுஞ்சியை**
**முன்னு றப்புணர்ந் தீன்ற முதற்பிளை**
**என்னு டைக்குல தெய்வதம் என்பனே.** **(5)**

*வேய்–மூங்கில். பன்னு–கூறப்பெறும். பாற்கடல்துஞ்சி–பாற்கடலில் தூங்கும் திருமால்.*

**48.** **என்ப ணிந்த இறையவன் இம்பர்வான்**
**முன்ப ணிந்த முதற்பொருள் முக்கணன்**
**பொன்ப ணிந்தபொன் னம்பலத் தாடல்போல்**
**அன்ப ணிந்தஎம் ஐயப்பன் ஆடுமே.** **(6)**

*இம்பர்–இவ்வுலகத்தவர். பொன்–இலக்குமி.*

49. ஆடு மாடுக ளார்வன ரட்சகன்
சேடு கொண்ட திரியம் பகபுரத்(து)
ஈடு காண்பார் இலாத ஒருவன்ளம்
பீடு தாங்கும் பிளைமணி கண்டனே. (7)

*ஆர்–பொருந்திய. வளரட்சகன்–முல்லைநிலக் கடவுள், திருமால். சேடு–அழகு, இளமை, பெருமை. ஈடு–ஒப்பு. பீடு–பெருமை. பிளை–பிள்ளை.*

50. கண்ட கண்கள் கணக்குள் ளடங்குமோ?
விண்ட வாய்கள் விளம்ப முடியுமோ
தண்ட லைச்சப ரிச்சிலை யாம்தலத்(து)
அண்டர் போற்றிடும் ஐயனை அண்மியே. (8)

*விண்ட–சொன்ன. விளம்ப–கூற. தண்டலை–சோலை.*

51. அண்மி வம்மின்எம் ஐயப்பன் மாரொடும்
எண்மி குந்த இருமுடிக் கட்டொடும்
தண்மி டைந்த சபரி மலைக்கிறை
விண்மி டைந்த விளக்கெனத் தோன்றுமே. (9)

*அண்மி–நெருங்கி. தண்–குளிர்ச்சி. மிடைந்த–பொருந்திய.*

52. தோன்று தைம்மக ரச்சுயஞ் ஜோதியை
ஈன்று காத்த இருவர் உருவனைச்
சான்று சொல்லிக் கலியுகந் தான்உயும்
ஏன்று கொண்மின் எனதுரை பாருளீர்! (10)

*ஈன்று காத்த இருவர்–அரனும் அரியும். ஈன்று–பெற்று. ஏன்று–ஏற்று.*

53. பாரு ளீர்! வந்து பந்தளப் பாலனைச்
சேரு வீர்! ஒரு மண்டலஞ் செய்தவம்
சாரு வீர்! அழு தைபம்பைத் தண்புனல்
ஆரு வீர்! நும்மை ஆட்கொளும் ஐயனே. (11)

*ஆருவீர்–நீராடுதலைச் செய்வீர்.*

(பாடுகையில் தாயார், மாப்பிள்ளை ஸ்ரீ வேணுகோபாலய்யர்,
தங்கை செள.பத்மாவதி மூவராலும் எழுதப்பட்டன வை பாடல்கள்)

- (ஐயப்பன் அருட்புகழ்ப் பதிகம் முற்றும்) -

# VI. திருவாரூர் ஐயப்பன் அருட்புகழ்
## (உயிர் வர்க்கப் பதிகம்)

(27–1–1969–இல் எண்.5 மடப்புரம் பாட்டை, திருவாரூர், எஸ். வேணுகோபாலய்யர் அவர்கள் இல்லத்தில் பாடியருளப் பெற்றது.)

தோடி) **(அறுசீர் விருத்தம்)** (ஆதி

**54.** அறிவிலேன் அறிவுள் ளோருக் கரும்பணி விடைசெய் கில்லேன்
சிறியனேன் தெய்வம் பேணேன் சிவஞானம் வாய்க்க கில்லேன்
நெறியிலேன் எனினும் என்னை நினதடி யாளுக் கொள்ளாய்!
அறிபவர் உளம்போற் றுரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (1)

**55.** ஆலயம் சூழ கில்லேன் அன்பினுல் அருளைச் சாரேன்
மாலயம் பொருந்த உன்றன் மணிப்புகழ் பாட மாட்டேன்
நாலயப் படுமா றுறு சுவைநனி நாட்டம் கொள்வேன்
ஆலயப் படுமோ? ஆரூர் ஐயப்பா! அருள் செய்வாயே. (2)

*மா–பெரிய. லயம்–இணைதல். ஆ–உயிராகிய பசு. லயப்படுமோ–சேருமோ.*

**56.** இனித்துணை இரண்டு தாய்மார் இருபுறம் இருக்கக் காட்சி
மனித்தநற் பிறவி யூடே காண்பதோர் மாண்பார் ஆசை
ஜெனித்த இச் சிறுநா யேன்யான் ஜீவன்முக் தியைப்பெற் றுய்ய
அனித்தவாழ் வுதறேன் ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (3)

*இனித்த–இன்பமாய். இரண்டு தாய்மார்–பூரணை, புஷ்கலை. அனித்த–நிலையற்ற.*

**57.** ஈதலின் பெருமை ஓரேன் ஈபவர்க் கிடையீ டாவேன்
ஓதலின் பயன்இங் காயேன் உள்ளுணர் வொருசற் றில்லேன்
சாதலிற் பிறிதோர் மார்க்கம் காண்கிலேன் சாக மாட்டேன்
ஆதலிற் கமலை ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (4)

*ஓரேன்–உணரேன். இடையீடு–இடையூறு. ஆயேன்–ஆராயேன்.*

**58.** உண்மைஎன் றுல்ஓர் காதம் ஓடுவேன் உருப்ப டேன்நான்
பெண்மைமண் பொன்மூ வாசை பேயனேன் பிரிய கில்லேன்
வண்மைஎன் பதும்இல் வாழ்வில் வாய்த்திலேன் வாழ்வ தென்னே
அண்மையில் துறக்க ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (5)

*வண்மை–கொடுக்கும் தன்மை. அண்மையில்–கொஞ்ச நாளில். துறக்க–துறவறம் மேற்கொள்ள. (15–2–1969–இல் துறவியானார்)*

**59.** ஊமையாய்ப் பிறந்தேன் இல்லேன் உரைப்பதெல் லாம்பொய் உன்னை
மாமையாற் புகழ்கள் பாடி வழுத்தவும் வழிதே டேன்யான்
மாமையார் பொழில்சூழ் செல்வ மடப்புரத் தரசே! ஐந்தும்
ஆமைபோல் அடக்க ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (6)

*மாமை–மேனி, அழகு. மா மை–பெரிய பசுமை நிறைந்த.*

60. என்பிழை பொறுத்தா ளாயேல் எனக்கினிக் கதிவே றூர்சொல்
உன்பிளை தவறு செய்தால் உனக்கன்றோ! ஈனம் மானம்
இன்பிறோ டரனும் மாலும் ஈன்றபசே யே!என் பால்உன்
அன்பினுக் கலந்தேன் ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (7)

*பிளை—பிள்ளை. அலந்தேன்—ஏங்கினேன்.*

61. ஏடறிந் துணரேன் நாயேன் எனினும்என் இசைகள் ஏற்பாய்
நாடறிந் திடுமா றென்னை நாய்த்தவி சேற்று வித்தாய்
வீடறிந் ததனுள் புக்கு விமலவாழ் வெய்த வேண்டும்
ஆடலைச் செய்யாய்! ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (8)

*ஏடு—நூல்கள். தவிசு—உயர்ந்த ஆஸநம்.*

62. ஐங்கரன் கந்தன் வீரன் வைரவன் அயன்மைக் காமன்
தங்கள்ஸோ தரனும் ஐய! தருமசாஸ்த் தாஎன் மெய்ய!
சங்கர ஹரிகு மார! சங்கரி கமலை செல்வ!
அங்கரச் செண்டாள் ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (9)

*வீரன்— வீரபத்திரன். சங்கரி—பார்வதி. கமலை—இலக்குமி. செண்டு—செண்டாயுதம்.*

63. ஒப்புனக் கொருவர் இல்லை உறுதிஈ துலகில் மெய்த்த
செப்புநற் கலிக்கண் கண்ட தெய்வம்நீ அன்றோ! தேரில்
துப்புனைத் தொடர்வ தென்றே துணிந்துகண் டனன்பின் ஆள்வார்
அப்புறம் ஆரோ? ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (10)

*மெய்த்த—உண்மையான. செப்பு—வார்த்தை. கலி—கலியுகம். தேரில்—ஆராய்ந்து தெளிந்தால். துப்பு—அறிவுள்ளமை.*

64. ஓமெனச் சபரி வெற்பில் உயர்படி ஈர்ஒன் பானும்
தாமெனத் தத்து வங்கள் சமயமற் றவற்றைத் தாண்டி
நாமென வீறு கொண்டு நன்குவீற் றிரும்போய்! நன்மை
ஆமென ஓர்சொல் ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (11)

*ஈர் ஒன்பான்—2x9=18. வீறு—பெருமை.*

65. ஔதசி யம்போல் மேனி அல்லிவாழ் கலைமான் ஆசிக்
கௌதம முநிமுன் பம்பைக் கமலமா டிக்கண் டுற்ற
நௌதனிப் பிறவிக் கன்னி நலம்குலாம் கமலத் தாளா!
ஔதனைப் போல்வாழ் ஆரூர் ஐயப்பா! அருள்செய் வாயே. (12)

*(ஔதசியம்....தாளா: இங்குள்ள கதைக்கு குறிப்பு விளங்கவில்லை. ஆய்தற்குரியது) ஔதசியம்—பால். நௌ—படகு. அன்ன— போல. ஔ— இங்கு இரண்டு எழுத்துக்கள் இருந்தாலும் ஒரே எழுத்தாகச் சொல்லப்படுகிறது. ஆனால் எழுத்துக்கள் தனித்தனி ஒட்டாமல் உள. ஒட்டியும், ஒட்டாமலும் இருக்கும் ஐயப்பன் நிலை கூறப்படுகிறது.*

- (திருவாரூர் ஐயப்பன் அருட்புகழ் முற்றும்) -

# VII. சீகாழித் தென்பாதிக் கைவிடான் சேரி ரைவந்த சாஸ்த்தா அருட்புகழ்

(12–4–1976–இல் பாடியருளப் பெற்றது)

சங்கராபரணம்) **(நேரிசை வெண்பாப் பதிகம்)** (சுத்தாங்கம்

**66.** **காழிநகர்த் தென்பாதிக் கைவிடான் சேரியிலே**
**கோழிபிடித் தேயும் கொடிச்சாத்த !–வாழிநீ !**
**செண்டைவிட்டுக் கையிற் செழுங்கமல மொட்டேந்தும்**
**தொண்டைஎன்று கைக்கொண்டாய்? சொல். (1)**

*கோழி–சாஸ்த்தாவின் கொடியில் கோழி உளது. செண்டை.... மொட்டு–இவர் கையில் செண்டாயுதம் இல்லை. தாமரை மொட்டே உளது என்றதன் குறிப்பு.*

**67.** **கும்பாபி ஷேகக் குதூஹலவி ழாக்கண்டு**
**தென்பாதிக் கைவிடான் சேரியில்நின்–றின்பாடல்**
**கொண்ட அமைதிக் குறிப்பருள்உன் சாய்முகத்தைக்**
**கண்டநெஞ்சம் ஓடும் கரைந்து. (2)**

*இன்பாடல்–அருட்புகழ்ப் பாடல்கள். சாய்முகம்– சாஸ்த்தாவின் முகம் சிறிது சாய்ந்துளதன் குறிப்பு.*

**68.** **கைவிடான் சேரியில்மா காளர்தொழும் காரியே !**
**கைவிடா மே சசியைக் காப்பாற்றிப்–பொய்விடாச்**
**சூரனது தங்கை அஜமுகிகை சோரவெட்டும்**
**வீரதீ ரா !அருள்செய் மிக்கு. (3)**

*மாகாளர்–ஐயனாரின் பாதுகாவற் பணியாளர். காரி–ஐயனார். சசி–இந்திரனின் மனைவி. கை சோர–கை வலிமை இழக்க.*

**69.** **சீகாழி மாநகரில் தென்பாதி ஆம்தலத்தில்**
**மாகாளர் போற்றி வழிபடவாழ்–ஸ்ரீ காரீ !**
**ரைவந்த சாஸ்த்தா எனப்பெயர்கொள் தைவதமாம்**
**கைவந்த பூங்கமலா ! கா. (4)**

*கை வந்த பூங்கமலா–கரத்தில் தாமரை உள்ளதன் குறிப்பு.*

**70.** **சீரிலங்கும் பூந்தராய்த் தென்பாதிக் கைவிடான்**
**சேரிதங்கும் மால்புத் திரனே !பேர்–காரிஎன்றும்**
**கொண்டகொண்டல் வண்ணத்தாய் ! கோழிக் கொடிக்கரத்தாய் !**
**புண்டரிகம் பூத்தநின்கை போது. (5)**

*பூந்தராய்–சீகாழியின் பெயர். கொண்டல்–மேகம். ஐயனார் மேக நிறத்தவர். புண்டரிகம்–தாமரை. போது–மலர்.*

71. திருஞாந ஸம்பந்தர் சீகாழித் தெற்கில்
உருவான தென்பாதி ஓங்க–வருமான
ஐயனே! ரைவந்த சாத்தனே! அம்புயம்சேர்
கையனே! காற்கமலம் காட்டு. (6)

*திருஞான...சீகாழி–சம்பந்தர் அவதரித்த சீகாழி. வரும் மான–இருந்து வரும் பெருமை. வருமான ஐயன்–வணங்குவார்க்குப் பொருள் வரவினை உண்டாக்கும் சாஸ்தா எனினுமாம். அம்புயம்–தாமரை. காற்கமலம்–பாத தாமரை.*

72. தெய்வயா னைக்கன்னை தேவிஇந்தி ராணியைமுன்
மெய்வருந்த மேடமுகி மேற்செலுமுன்–கைவிடேன்
கைவிடான் சேரிமஹா காளனியான் காப்பேன்என்(று)
உய்விழைத்தான் உன்சொல் உணர்ந்து. (7)

*மேடமுகி–சூரபத்மன் தங்கையாம் அஜமுகி. உய்விழைத்தான்– உய்வு+இழைத்தான்.*

73. தென்பாதிக் கைவிடான் சேரியில்வாழ் காரியே!
அன்பாதி யாம்ஐய னரே! அப்–பன்பாதி
அம்மைஒரு பாதியாம் அம்மைஅப்பர் ஆழிகொள்மால்
தம்மைஎந்தாய் எண்ணத் தகும். (8)

*ஆழி–சக்ராயுதம். "எந்தாய்–என் தந்தை, என் தாய் என இருபொருளது. தந்தை என்பது சிவனுக்கும் தாய் திருமாலுக்கும் பொருந்தும். எந்தாய் எனும்சொல் இருவிருக்கும் பொது என்கையில் ஆர் வந்தாலும் என்ன வடமுல்லை வாயில் வாழ் வைஷ்ணவியே" 'எந்தாய்'–வைஷ்ணவி ஸந்நிதி முறை.*

74. தென்பாதித் தெற்கெல்லை சேர்கை விடான்சேரி
முன்பா!தித் திக்கும் மொழிபேசும்–தன்பாதிச்
சங்கரியை விட்டந்தச் சங்கரனும் நிற்பெறவே
சங்கரியைப் போய்க்கலந்தான் தான். (9)

*முன்பா–தலைவனே, பழமையானவனே. நிற் பெற–உன்னைப் பெற்றெடுக்க. சங்கரி–சங்கு+அரி=விஷ்ணு.*

75. ஹரிஹர புத்திரன்நீ ஹஸ்த்திஹயம் ஏறும்
தரிசநம்என் றெற்குத் தருவாய்?– கரிசநத்தோ
டைராணி தன்னைக்காத் தான்கை விடான்சேரி
ஐராணி சேயே! அருள்! (10)

*ஹஸ்த்தி, அத்தி–யானை. ஹயம்–அயம்–குதிரை. கரிசநம்–அன்பு. ஐராணி–அயிராணி, இந்திரன் மனைவியாம் இந்திராணி. ஐராணி–அழகில் ராணி போல்வாளாம் மோஹினி (திருமால்). ஐ–அழகு.*

–(ஸ்ரீகாழித் தென்பாதிக் கைவிடான் சேரி ரைவந்த சாஸ்த்தா அருட்புகழ் முற்றும்.)–

# VIII. உதகை இந்து நகர்த் தர்ம சாஸ்த்தா அருட்புகழ்

(ஹிந்துஸ்தான் ஃபோடோ ஃபிலிம்ஸ் குடியிருப்பு வரஸித்தி விநாயகர் கோயிலில், ஐயப்பன் ஸந்நிதியில் 20–5–1980–இல் திருவாய் மலர்ந்தருளப்பெற்றது. ஸ்வாமிகள் கல்ஹட்டி வைஷ்ணவி எஸ்டேட்டில் தங்கியிருந்தார். HPF Civil Engineer திரு. ஸ்ரீநிவாஸன் அவர்கள் அருட்பாடல் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தார்.)

கானடா) **(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)** (ஆதி

**76.** **அண்ணா மாரா இபமுகனை ஆறு முகனை வைரவனை**
**எண்ணார் வீர பத்திரனை இவர்நால் வரைக்கொள் இளையவனே!**
**தண்ணார் உதகை இந்து நகர்த் தரும சாஸ்த்தா! ஐயப்பா!**
**பெண்ணா அரிஆ ணரனும் பெற்ற பிள்ளைப் பெருமானே! (1)**

*அண்ணா மாரா–அண்ணன்மார்களாக. இபம்–யானை. எண்ணார்– உயர்வாக எண்ணப் பெறும். தண்–குளிர்ச்சி.*

**77.** **அபரி மிதமாய் உன்கழல்கட்(கு) அன்பு வைத்தே அடியேனும்**
**உபரி யாக உன்புகழே ஓத வைப்பாய்! உதகைக்கோர்**
**சபரி கிரிபோன்ம் இந்துநகர்த் தரும சாஸ்த்தா! ஐயப்பா!**
**ஸபரி வாரம் மஞ்சள் மா தாநா கங்கொள் தளியவனே! (2)**

*அபரிமிதம்–அதிகம். உபரி–மேலும். போன்ம்–போல. ஸ பரிவாரம்– பரிவார தேவதைகளோடு. தளி–கோயில்.*

**78.** **அப்பா! ஐயா! ஐயப்பா! ஐயப் பா!என் சரணம்விளித்(து)**
**ஒப்பார் இன்றி உபாஸிப்பார் உள்ளக் கவலை ஒழித் திடலில்**
**தப்பா உதகை இந்து நகர்த் தரும சாஸ்த்தா! ஐயப்பா!**
**செப்பாய்! ஞாந உபதேசம் செவியில் எனக்கே இத்ததியே. (3)**

*என்–என்று. இத் ததி–இந்தத் தருணம்.*

**79.** **அல்லும் பகலும் அடியவர்கள் சாமீ! சரணம் ஐயப்பா!**
**சொல்லும் சரண விளிகள்விண்ணைத் தொடும்ஊர் உதகை இந்துநகர்ப்**
**புல்லும் தரையும் புடைதவழ்கோ புரக்கோ யிலினுட் புகுந்துசெங்கோல்**
**செல்லும் படிக்குச் செலுத்தரசாம் தேவே! தரும சாஸ்த்தாவே! (4)**

*அல்லும்–இரவும். புடை–பக்கம்.*

**80.** **அச்சன் கோயில் ஆரியன்கா(வு) அருமை எருமை வேலிபுவித்**
**தச்சன் படைத்த சபரிமலை காந்த மலைப்பொன் னம்பலத்தான்**
**எச்சம் குளத்துப் புழைகுளத்தூர் இந்து நகரம் இலங்குதகை**
**ஸொச்சந் தமதாத் துலங்குமஹா ஜோதீ! தரும சாஸ்த்தாவே! (5)**

*புவித்தச்சன்–உலகக் கொத்தனார்கள். எச்சம்–பாக்கி. ஸொ சந்தம்– சொந்த அழகு. அதா– அதுவாக. ஸொச்சம்–மிகுதி. தமதா–தம்முடையதாக எனினுமாம்.*

**81.** **அருகில் வரஸித் திகணேசன் அழகார் பால முருகன்நவக்**
**கிரஹம் குடிகொள் கோயில்வலம் கிளர, அரவும் மாளிகைப்பேர்ப்**

புரத்தாள் மஞ்சள் மாதாவும் புடைசூழ் கோயிற் பொலிகின்றாய்!
இரவைப் பகலாக்(கு) இந்துநகர்க் கினிய தரும சாஸ்த்தாவே! (6)

*இரவைப் பகல் ஆக்கு.... இந்துநகர்–இரவு முழுதும் மின் விளக்குகள் எரிவது பகல் போல் தோன்றிற்று.*

82. அம்மை அரிநா ராயணனே அப்பன் அரனும் பரசிவனே
இம்மை மறுமை வீடருளும் இவர்தாம் இருவர் பெறுஸுதனே!
செம்மை உதகை இந்துநகர்த் திகழும் தரும சாஸ்த்தாவே!
வெம்மை யோக பட்டபந்தம் விளங்கும் கோல மேனியனே! (7)

*இம்மை–இவ்வுலக ஸுகம். மறுமை–ஸொர்க்க போகம். வெம்மை– தவ வெப்பம்.*

83. அரியின் மக்கள் விதிமதனும் அமுத வலிஸுந் தரவலியாம்
தெரியின் தேவ ஸேனைவளிச் செல்வி மாரும் நினக்குறவாம்
உரிய முறைமை எங்ஙனமோ? உரையாய்! உதகை இந்துநகர்ப்
பெரிய தரும சாஸ்த்தாவே! பேசற் கரிய பெம்மானே! (8)

*விதி–பிரமன். மதன்–மன்மதன். வலி–வல்லி. இடைக் குறை.*

84. அட்ட மூர்த்தி ஆனவனே! ஐய னரின் அவதாரா!
இட்ட மூர்த்தி யாத்தொழுவார்க்(கு) இன்பம் எல்லாம் ஈபவனே!
ஒட்டக் குளிரும் இந்துநகர் உதகைத் தர்ம சாஸ்த்தாவே!
பட்டப் பகல்நள் ளிரவில்எலாம் பாடிப் பரவப் பணித்தருளே! (9)

*அட்ட மூர்த்தி–நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், கதிரவன், சந்திரன், உயிர்கள் இந்த எட்டு இடங்களிலும் இறைவன் உளன்.*

85. அந்ந தாநப் ப்ரியவானே! அபிஷே கத்துள் நெய்விழைவோய்!
ஸொந்ந மேனி யுடன்சபரித் தொன்மா மலைமேல் துலங்குருவே!
சந்ந உதகை இந்து நகர்த் தரும சாஸ்த்தா ஐயப்பா!
பிந்நம் இல்லா தபிந்நமதாப் பிறங்கும் பிரானே! பெரிதருளே! (10)

*நெய் விழைவோய்–ஐயப்பன் நெய்யபிஷேகப் ப்ரியன். ஸொந்ந–ஐம்பொன். சந்ந–நுண்மையான, மறைபொருளான. பிந்நம்–பிரிக்கப் படுதல். பிறங்கும்–விளங்கும்.*

– (உதகை இந்து நகர் ஐயப்பன் அருட்புகழ் முற்றும்) –

## IX. ஸ்ரீ ஐயப்பன் (16) போற்றித் திரு அகவல்*

86. திருமகள் கேள்வன் ஶிவன்ஸுத! போற்றி!
கருமுகில் நேர்நிறக் காயனே ! போற்றி!
தருமஶாஸ்த் தாஎனும் ஸ்வாமியே! போற்றி!
இருமக ளிரைப்புணர்ந்(து) இணைந்தாய்! போற்றி!
ஒருமகள் பூரணைக் குரியவ! போற்றி! 5

* நெய்வேலி–607801, ஸ்ரீ பொங்கி மாதா திருப்புகழ் ஸங்க உறுப்பினர்–திரு. வி. ஆர். ஜகந்நாதன் அவர்களின் வேண்டுகோளின்படி 28–11–1987–இல் நெய்வேலியில் யாத்தருளப் பெற்றது.

அருமகள் புஷ்க்களைக் கானவ! போற்றி!
குருபக வான்எனக் குலவுவை! போற்றி!
பெருமைகொள் ஐயப்பன் பேரினாய்! போற்றி!
ஒருமையுள் மாணியா உயர்ந்தனை ! போற்றி!
செருமகிழ் புலிப்பரி செலுத்துவை! போற்றி!
மருமலி ஶபரி மலைக்கோன்! போற்றி!
நிருமல யோகஶாஸ்த் தா!நின்பேர் போற்றி!
கருமலம் களைமணி கண்டனே! போற்றி!
இருமல்நோய் முதற்பல இரிப்பிப்பை! போற்றி!
பருமுடி ராஜஶே கரன்பையல்! போற்றி!
இருமுடிப் ப்ரியனாும் இறைவனே! போற்றி!

*கேள்வன்–கணவன். காயம்–தேஹம். மாணி–பிரமசாரி. இரிப்பிப்பை–நீங்கச்செய்வாய். பருமுடி–பெரிய கிரீடம். ராஜஶேகரன்–பந்தள தேச மன்னன். பையல்–மகன்.*

- (ஸ்ரீ ஐயப்பன் (16) போற்றித் திரு அகவல் முற்றும்) -

## X. சபரிமலை ஐயப்பன் ஶரணப் பதிகம்

(11–12–1989–இல் நங்கைநல்லூரில் அருளப் பெற்றது)

ஹரிகாம்போதி) **(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)** (ரூபகம்

87. ஜோதிவடி வாய்நிற்கும் மகர ஜோதீ!
    ஸோமஶே கரன்விண்டு ஸூதனாய் வந்த
ஆதிமுதற் பரம்பொருளே! ஐம்ம லைக்கும்
    அதிபதியே! அத்திமுகற் கறுமு கற்கும்
கோதில்பயி ரவர்வீர பத்தி ரர்க்கும்
    கூடவே பிறந்தோனே! குலஶாஸ்த் தாவே!
ஜாதிமத ஸமயம்எலாம் கடந்த ஸ்வாமீ!
    ஶபரிமலை ஐயப்பா ஶரண்நின் தாளே. (1)

*விண்டு–விஷ்ணு. ஐம்மலை–அழுதை மலை, கரிமலை, நீலிமலை, காந்தமலை, சபரிமலை ஆகிய ஐந்து மலைகள். அத்தி–யானை. கோதில்–குற்றமற்ற. குல–பெருமை வாய்ந்த.*

88. மணிகண்ட மஹாப்ரபுவே! மஹிஷி தன்னை
    மர்த்தநம்செய் நர்த்தநனே! வல்வில் காரீ!
பிணிகண்ட தேஹத்திற் பிறந்த பேயேன்
    பிறவிஎனும் பிணிதீர்க்கும் மருந்தே! நீல
மணிகண்டன் மாமதலாய்! வாவர் தோழா!
    வளர்பதினெட் டுப்படிகொள் நடைவ ரைக்கண்
தணிகண்ட தத்வமஸி மஹாவாக் யம்காண்
    ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (2)

*மர்த்தநம்–கொல்லுதல். வல்வில்–வலிமையான வில்லையுடைய. காரி–ஐயனார். மணிகண்டன்–சிவபிரான். வாவர்–ஐயப்பனின் முஸ்லிம் தோழரான வாபர். நடை–ஸந்நிதி. வரை–சபரிமலை. தணிகண்ட–மனக்கலக்கம் தணிந்த. தத்வமஸி–ஸாமவேதத்துக் குரிய மஹாவாக்யம்.*

89. ஸ்வாமியே! ஶரணம்ஐயப் பா !என் றோதிச்
சரணகோ ஷம்கொடுக்கும் ஐயப் பன்மார்
பூமிமேல் எருமேலி காளை கட்டி
புழைஅழுதை கரிமலைபோய்ப் பம்பை ஆறு
மீமிகுத்த நீலிமலை அப்பாச் சிப்பேர்
மேடுகுழி சபரிப்பீ டம்கோல் குத்தி
தாமிரிந்து கடந்துகாண் ஸந்நி தானச்
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (3)

*எருமேலி–எருமைவேலி. காளைகட்டி–மகிஷியைக் கொன்ற ஐயப்பனின் நர்த்தனத்தைப் பார்க்க வந்த–பார்வதி பரமேச்வரர்களைத் தாங்கிய ரிஷப வாகனம் கட்டி வைக்கப்பட்டிருந்த ஓரிடம். இது அழுதை மேட்டில் உள்ளது. அழுதைப்புழை–அழுதாநதி. மீ–மேலே. கோல்குத்தி–சரங்குத்தி. புலிமேல் ஐயப்பன் பந்தளம் வந்து, காட்டுக்குத் திரும்பிய போது, 'உன்னை இனி எங்கு காண்பது' என்று மன்னன் கேட்க, அம்பு எய்து ஐயப்பன் இடம் காட்டினார். அம்பு சென்று விழுந்த இடம் சரங்குத்தியால் எனப்படுகின்றது. இரிந்து–நடந்து.*

90. இருமுடிக்கட் டெனும்பள்ளிக் கட்டை வேணி
ஏந்திநாற் பதுகலின்மேல் தொலைவு யாத்ரை
எருமைவே லியிற்றொடங்கிப் பேட்டை துள்ளி
ஈருகத் திருமுன்னர் எய்தும் காறும்
கருமைநீல் காவிஉடை களில்ஒன் றேற்றுக்
கூந்துநடந் தேகல்லும் முள்ளும் காற்கீழ்த்
தருமெத்தை யாக்கொடையப் பன்மார் சூழும்
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (4)

*வேணி–சடைத் தலை. கல்–மைல். பேட்டை துள்ளி–வில்லும் அம்பும் தாங்கிப் பல வர்ணப் பொடிகளை உடலில் பூசிக் கொண்டு, பாடியாடுதல். இது எருமை வேலியில் நிகழ்வது. மெத்தை–மெத்தென்றிருக்கும் பஞ்சடைத்த துணி.*

91. விருச்சிகத்தின் முதல்நாளே மாலை பூண்டு
விரதம்இருக் கத்தொடங்கிச் சரண்வி ளித்தும்
அருச்சனைகள் காலையும்மா லையும்நீ ராடி
அணிவெண்ணீ றுடினனக் காற்றி அன்பாய்க்
கருச்சனை போற் சரணவிளிப் பஜனை பாடிக்
காமாதி களைத்துறந்தும் விடக்குண் ணுமே
தரிச்சநோன் பினில்உண்மைத் தவம்செய் வார்தாழ்
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (5)

*விருச்சிகத்தின் முதல் நாள்– கார்த்திகை மாதம் முதல் தேதி. விடக்கு–மாமிசம். தரிச்ச–தரித்த, மேற்கொண்ட.*

92. ஐவரையுள் ஆரியன்கா வச்சன் கோயில்
அணிகுளத்துப் புழைவாயில் எருமை வேலி
மெய்வரையாம் காந்தமலை விளக்கு ஜோதி
மேட்டுப்பொன் னம்பலமேற் சபரி வெற்புத்
தெய்வம்எனக் குடிகொண்ட குளத்தூர் ஐயா!
திண்புலிபோற் கரிபரிவா ஹநமும் கொண்ட

தைவதமே! நெய்யபிஷே கம்த வாத
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (6)

*வரை—மலை. திண்டலி... வாஹநம்—புலியுடன் யானை, குதிரை வாகனங்களும் ஐயப்பனுக்கு உண்டு. தைவதம்—தெய்வம். தவாத—தவறாத.*

93. பூரணைக்குக் கொண்கன்எனும் போக ஶாஸ்த்தா!
புஷ்க்களைக்குக் கொழுநன்எனும் யோக ஶாஸ்த்தா!
வாரணத்தா ரகனைஇவர் வால ஶாஸ்த்தா!
வழங்கந்ந தாந(ம்)மகிழ் தரும ஶாஸ்த்தா!
நாரணற்கா வேறணற்கா நந்த ஶாஸ்த்தா!
நவில்திரியம் பகபுரம்வாழ் க்ருத ஶாஸ்த்தா!
ஶாரணப்பேர்ச் ஶிவகணத்தின் நாத ஶாஸ்த்தா!
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (7)

*கொண்கன்—கணவன். கொழுநன்—கணவன். யானை முகத் தாரகாஸுரனை ஐயனார் தம் வாகனமாகக் கொண்டவர். இவர்—ஏறும். வால—பால. நாரணற்கு ஆ ஏறு அ(ண்)ணற்கு—மாலுக்கும் இடபம் ஏறும் சிவனுக்கும்.*

94. வாயில்லாக் குணிபேசும் ஸந்நி தாநம்
மறைந்திருகண் பார்வைவரும் ஸந்நி தாநம்
சேயில்லார் சேய்ப்பேறுர் ஸந்நி தாநம்
செவிகெட்டார் கேள்விபெறும் ஸந்நி தாநம்
நோயில்லா வாழ்வுதரும் ஸந்நி தாநம்
நோன்பெல்லாம் பூரணமாம் ஸந்நி தாநம்
தாயில்லாம் ஶாஸ்த்தாநின் ஸந்நி தாநம்
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (8)

*குணி—ஊமை. சேய்ப் பேறு ஆர்—குழந்தைப் பேறு பெறும்.*

95. மச்சாவ தாரன்கண் பிடுங்கி வந்தாய்!
மாதாதைக் கணியஅதை வழங்கி நின்றாய்!
பிச்சாட நப்பெருமான் ஶிவக ணத்துப்
பெருந்தலைவ னாக்கோழிக் கொடிகைக் கொண்டாய்!
உச்சாட நத்தாற்பேய் ஓட்டும் மந்த்ரத்(து)
உருத்திரனே! உனக்கன்னை அரியே என்றால்
தச்சாஶ வதன்மனைநிற் கென்ன வேண்டும்?
ஶபரிமலை ஐயப்பா! ஶரண்நின் தாளே. (9)

*மச்சாவ....வந்தாய். மத்ஸ்யாவதார மூர்த்தியின் கண்ணை சிவன் ஆணைப்படி ஐயனார் பிடுங்கிவந்தார் என்றும் சொல்வர். தாதை—சிவபிரான். தத்—அந்த. சாசுவதன்—வைகுண்டவாஸனாம் விஷ்ணு. மனை—இலக்குமி.*

96. கானாளும் மணிகண்ட பிரம சாரீ!
காரிஐயன் காளநிறக் கடவுள் நீதான்
மானாளும் விழிமஞ்சள் மாதா கன்னி
மாமாளி கைப்புரத்தாள் வலத்தே வாழ்வாய்!

கோனான கனிமூலைக் கணப திக்கும்
குஹரூப நாகர்க்கும் கோயில் உள்ள
தானான தனிக்கோயில் கேர ளத்தில்
சபரிமலை ஐயப்பா! சரண்நின் தாளே. (10)

*கான்–காடு. காளம்–கருப்பு. ஆரும்–போன்ற. ஐயப்பனால் கொல்லப் பட்டபின், சாபம் நீங்கி மாறிய மஹிஷியின் உருவம் தான் மாளிகைப் புரத்தாள். மஞ்சள் பொடி மூலம் வழிபாடு பெறுவதால் "மஞ்சள் மாதா" ஆனாள். கனிமூலை–கன்னி மூலை.*

97\. மலையாளப் புறப்பாண்டி மன்னன் ராஜ
சேகரற்கு மைந்தன்மணி கண்டன் ஆகிச்
சிலையாகிப் பட்டபந்தம் வலித்துக் கட்டும்
திருமுழங்கால் யோகசாஸ்த் தாவும் ஆனாய்!
அலைசூழும் உலகோர்கள் அனைவ ரும்வந்(து)
அடிவணங்கும் பதினெட்டுப் படிக்கண் ணாவோ!
தலையாய கறுப்பணன்கொச் சுக்க டுத்த
சபரிமலை ஐயப்பா! சரண்நின் தாளே. (11)

*புறம்–வெளியே. சிலை–பிம்பம். கண்ணா–கண்போன்றவனே. ஓ–அசை. கொச்சு–குழந்தை. கொச்சுக் கடுத்த ஸ்வாமி, வலிய கடுத்த ஸ்வாமி இருவரையும் பரிவாரமாகக் கொண்டுள்ள ஐயப்பன் எனக் கூட்டுக.*

- (சபரிமலை ஐயப்பன் சரணப் பதிகம் முற்றும்) -

# XI. விருகம்பாக்கம் ஸாய்நகர் ஐயப்பன் அருட்புகழ் (உயிர்வர்க்க மாலை)

(சென்னை–92, விருகம்பாக்கம், (வேங்கடேச நகர்) ஸாய் நகர், எண் 57–A, கஸ்தூரித் தெரு, ஸ்ரீ எஸ். வேணுகோபாலய்யர் அவர்கள் இல்லத்தில் 29–3–1997–இல் அருளப் பெற்றது.) (12.35 - 13.25 PM)

**(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)** (ஆதி கரஹரப்ரியா)

98\. கரிய மேனிஎம் கருணையங் கடலும்
கண்ணு தற்றனிக் கடவுளும் கலவி
புரிய வந்துதித் தாய்!ஹரி ஹரஸ்ரீ
புத்தி ரப்பெயர் புடவியில் தாங்கி;
உரிய ஐயனும் அப்பனும் கலந்தே
உன்னை ஈன்றதால் ஐயப்பன் ஆனாய்
அரிய சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (1)

*கண்ணுதல்–நெற்றிக் கண். புடவி–உலகம். விருகை–விருகம்பாக்கம்.*

99. கான கங்களில் கரிபரி அரிமேல்
கவனி யாதிருப் பவநிகாண் பவனே!
ஞாந பூரணை புஷ்க்களை இருவர்
நாய கா!வர தாயக நாதா!
தாந தர்மங்கள் அந்நம்பா லிப்பும்
தகச்செய் வார்கட்கு மிகஅருள் பவனாய்
ஆன சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (2)

*கானகம்–காடு. கரி–யானை. பரி–குதிரை. அரி–புலி, சிங்கம். கவனியா–கவனத்துடன். தக–முறையாக.*

100. கிழவ னாய்வந்து போரிமா நகரில்
கெடகி லாமல்இவ் வடியனை ஆண்ட
மழவ னார்வடி வேலனார் துணைவா!
வரைய தாம்சப ரிக்கிரி வாஸா!
குழகுக் கோமள வடிவனாம் குமரா!
குன்றம் காந்தமா மலைநிலை பெற்றோய்!
அழகுச் சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (3)

*கிழவனாய்... ஆண்ட–ஸாதுராம் ஸ்வாமிகள் சரித்திரக் குறிப்பு. போரி–திருப்போரூர். கெடகிலாமல்–கெடமுடியாமல் மழவன்–இளைஞன். குழகு–இளமைச் செவ்வி.*

101. கீடம் நேர்எனைப் பதினெட்டுப் படிகள்
கிடத்தி யேநடந் தேகடந் திடவை
பூடணு!பரி பூரணு! பொன்னாம்
புதுமை மெய்த்திரு மேனிகொள் புனிதா!
நீட வந்திடும் ஐயப்பன் மார்கள்
நிறைவு றக்குறை தீர்க்கும்நெய்த் தீபா!
ஆடற் சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (4)

*கீடம்–புழு. பூடணு–நகைகள் அணிந்தவனே. நீட–தொடர்ந்து.*

102. குளத்து வண்புழை அச்சன்றன் கோயில்
கூறும் ஆரியன் காவெரு மேலி
வளத்துக் காந்தக்கல் சபரிமா மலைமேல்
வாழும் ஆரணு! நாரணன் மைந்தா!
உளப்பொன் மாமலை உறையும்எம் மானே!
யோகப் பந்தநப் பட்டம்உள் ளானே!
அளப்பில் சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (5)

*குளத்துப்புழை, அச்சன்கோயில், ஆரியன்காவு, எருமேலி, காந்தமலை, சபரிமலை இவை ஐயப்பனின் விசேஷத் தலங்கள். உளம்–மனம். பந்தநம்–கட்டு. அளப்பு–எல்லை.*

103. கூவி எம்மைஆட் கொண்டருள் குணத்தாய்!
குவல யக்கலி காலக்கா வலனே!
ஸேவி யாநிற்பார் சிந்தையில் கலக்கம்
தீர்த்து நல்லதோர் தெளிவருள் தெய்வம்!
பாவி யாஉள்ளம் பந்திப்பார் பாவம்
பாற்றும் நீற்றுமண் காப்பணி நுதலாய்!
ஆவி! சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (6)

குவலயம்–உலகம். பாவியா–பாவித்து. பந்திப்பார்–கட்டிவைப்பார். பாற்றும்–போக்கும். ஆவி–உயிர்.

104. கெடல்இ லாதசிந் முத்திரை காட்டிக்
கிழக்கு நோக்கியோ கத்தமர் கோலம்
மிடலொ டேஉற இடக்கரம் தாழ்த்தி
வீற்றி ருந்தருள் வேதவே தியனே!
மடல்கொள் தாழையும் மருவும்மல் லிகையும்
வன்னி யும்புனை மேனிவா னவனே!
அடல்கொள் சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (7)

மிடல்–வலிமை. மடல்–இதழ். வன்னி–வன்னிமர இலை. புனை– அணியும். அடல்–வெற்றி.

105. கேத நத்தொடு வாஹநம் கரியாக்
கிளர்த்தி டக்கொண்ட கேடில்சாஸ்த் தாவே!
பூத மாகணம் சிவகணம் பிறவும்
போற்றி ஏத்திடப் பெற்றகோ மகனே!
காத லால்உனைக் கசிந்துரு கன்பர்
கட்குச் சாபம்தீர் களைகணும் கண்ணே!
ஆத நச்சென்னை விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (8)

கேதநம்–கொடி. கரி–யானை. களைகண்–பற்றுக்கோடு. ஆதநம்– பலருடைய ஆஸ்திகள் நிறைந்த. ஆ–வியப்புக் குறிப்பு. தநச் சென்னை–பணம் நிறைந்த சென்னை எனினுமாம்.

106. கைய கத்துதித் தாய்!அரி அரற்கே
காணும் சேவலம் கொடிஉடைக் கரனே!
மைய மேனியாய்! நகர்ப்புறம் கிராமம்
வைய கத்தெங்கும் காவலன் ஆவாய்!
பையக் கேரள மாநிலம் கோயில்
பலவும் கொண்டுறை பரமசாஸ்த் தாவே!
ஐய! சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (9)

மை–கருமை நிறம் உடைய. வையகம்–உலகம். பைய–மெதுவாக.

107. கொடைகொள் கையினாய்! கொட்டொடு முழக்கும்
 கூறு மேளமும் தாளமும் முழங்கும்
நடைகொள் பாண்டிய நாட்டில்நல் லறமார்
 நற்றி ருப்பதி பலபல உடையாய்!
மடையில் வாளைகள் மச்சங்கள் உகளும்
 வயல்கள் சூழ்தமிழ் நாடுடை வள்ளால்!
அடையும் சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
 ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (10)

*நடைகொள்–நடைபெறும். மச்சங்கள்–மீன்கள். உகளும்–பாயும். அடையும் சென்னை–'கெட்டால் பட்டணம் போ' என்னும் மொழிப்படி ஏழை மக்கள் வாழ வழிதேடி வந்தடையும் சென்னை.*

108. கோயம் பேடெனக் குசலவர் அம்பை
 எடுத்த கோயிலுக் கருகினில் உறைவாய்!
தேயம் கேரளம் ஆயினும் செய்ய
 செந்த மிழ்த்திரு நாட்டினுக் குரியாய்!
வாய தாம்மறை வண்டமிழ்ப் பாவால்
 வழுத்து வார்என்றும் தொழத்தகு வடிவோய்!
ஆய சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
 ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (11)

*தேயம்–தேசம். வாயதாம்–(புகழ்) வாய்த்தவையான. மறை–ஸம்ஸ்க்ருத வேதம். வழுத்துவார்–புகழ்வார்.*

109. கௌவை ஆர்கடல் சூழ்ந்தநற் சென்னைக்
 கரைகொள் பட்டினம் காப்பவ னே!இங்(கு)
எவ்வ நத்தவ னாய்மைக்கத் தூரி
 இயற்பேர் வீதியில் எழுந்தரு ளிச்செய்
செவ்வை யாய்!ஐய னே!அப்ப னே!எம்
 தெய்வ மே!குரு வே!தாய்நல் தந்தாய்!
அவ்வை சென்னையில் விருகைஸாய் நகர்வாழ்
 ஐயப் பா!எமை ஆதரித் தருளே! (12)

*கௌவை–ஒலி. எவ்வநத்தவன்–இளைஞன். மை–கரிய. கத்தூரி... வீதி–கஸ்தூரித் தெரு. செவ்வை–சிறப்பு. அவ்வை சென்னை–திருமால், சிவபிரான் உருவங்கள் (கோயில்களில்) வைக்கப்பட்டுள்ள சென்னை நகரம்.*

(விருகை ஸாய் நகர் ஐயப்பன் (உயிர்வர்க்க மாலை) அருட்புகழ் முற்றும்)

(ஐயப்பன் அருட்புகழ்ப் பாடல்கள் முற்றும்)

சுபம்



## அருட்கவியார் பாடியுள்ள தெய்வங்களும், பிறரும்.

### தெய்வங்கள்

| | | | |
|---|---|---|---|
| அநுமன் | க்ருஷ்ணர் | குருவாயூரப்பன் | நரசிம்மர் |
| ஆண்டாள் | கணபதி | சரசுவதி | நவக்கிரகங்கள் |
| இராமர் | கன்னிகா பரமேச்வரி | சித்ரகுப்தர் | பார்வதி |
| இராமலிங்கேச்வரர் | கலியுக நாச்சியம்மை | சௌடாம்பிகை | பொன்னியம்மை |
| இலக்குமி | காளிகாதேவி | திருமால் | முத்துமாரியம்மை |
| ஐயப்பன் | | திரௌபதி அம்மன் | முருகவேள் |
| ஐயனார் | | நடராஜர் | ராதை |

### பண்டைப் பெரியோர்

| | | |
|---|---|---|
| அகத்தியர் | சிவஞாந முனிவர் | திருவள்ளுவர் |
| அருணகிரிநாதர் | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | மாணிக்கவாசக சுவாமிகள் |
| ஆதிசங்கரர் | சேக்கிழார் | மெய்கண்டார் |
| கஞ்சமலைச் சித்தர் | திருஞாநசம்பந்த சுவாமிகள் | |
| கருவூர்த்தேவர் | திருநாவுக்கரசு சுவாமிகள் | |

### மகான்கள்

| | |
|---|---|
| அருட்சக்தி அன்னை | சிவானந்த சுவாமிகள் (ரிஷிகேசம்) |
| இரெட்டியப்பட்டி சுவாமிகள் | சுப்பையா சுவாமிகள் (திண்டுக்கல்) |
| ஒற்றைவேட்டி சுவாமிகள் | சுப்பையா சுவாமிகள் (திருக்கழுக்குன்றம்) |
| காமகோடிபீடம் சந்த்ரசேகரேந்த்ர சரசுவதி சுவாமிகள் & ஜயேந்த்ர சரசுவதி சுவாமிகள் | சுரைக்காய் சுவாமிகள் |
| | சேஷாத்திரி சுவாமிகள் |
| | ரமண மகரிஷிகள் |
| சட்டி ஸ்வாமிகள் (மாணிக்க சுவாமிகள்) | வள்ளிமலைத் திருப்புகழ் சச்சிதாநந்த சுவாமிகள் |
| சாயிபாபா (ஷிரடி) | விலட்சணானந்த சுவாமிகள் |

வலம்புரிச்சங்கு

---

## பொங்கி மடாலயத்தில் விற்பனைக்குக் கிடைப்பன

1. வேல்மாறல் மஹாமந்த்ரம் (தபால் செலவுடன்) - ரூ. 20 + 7
2. திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு - ரூ. 10 + 7
3. மார்கழிப் பாராயணத் திரட்டு (அருட்புகழ்) - ரூ. 25 + 7
4. திருமுருகன் ஹர ஹரோ ஹராக் கும்மி (108) - ரூ. 10 + 4
5. திருப்போரூர் முருகன் இரட்டைமணி மாலை - ரூ. 5 + 1
6. திருப்புகழ் நவமணி கேஸட்டு (60 நிமிடம்) - ரூ. 30 + 20
7. திருப்புகழ்ப் பாராயணத் திருநெறித் தவமுறை - ரூ. 40 + 10
8. சென்னைத் திருக்கோயில்கள் திரு அருட்புகழ் - (ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் சரித்ரமும் பாடல்களும்) பகுதி-1 - ரூ. 50 + 10
9. சென்னைத் திருக்கோயில்கள் திரு அருட்புகழ் - பகுதி–2 - ரூ. 50 + 10
10. நவக்ரஹ அருட்புகழ் (72 பக்கங்கள்) - ரூ. 15 + 10
11. திருப்புகழ் போற்றும் திருமுருகன் (1000 + 108 போற்றிகள் – அர்ச்சனைக்கு) - ரூ. 12 + 4
12. ஆலய தரிசநப் பாடல்கள் (பாகம்–4) - ரூ. 20 + 10
13. கதிராமங்கலம் வனதுர்க்கைத் தாரக வெண்பா அந்தாதி - ரூ. 10 + 2

